## 93

# அர்ச்சனை ரூபாய்

ஒருவிதமாக இரவுப் பொழுது போயிற்று. ஒவ்வொரு மணியும் மெள்ள மெள்ள நகர்ந்து ஊர்வதுபோலத் தோன்றிற்று பாலுவிற்கு. அதிலும் அன்றிரவு தீராதோ என்று எண்ணும்படியாக அவ்வளவு கவலையுடன் கழிந்தது. 'எப்போது விடியும்? எப்பொழுது டாக்டர் வருவார்?' என்று பாலுவும் அவன் மனைவியும் தாயும் ஏங்கித் தவித்தார்கள்.

குழந்தை ராஜம் பிரக்ஞையற்றுப் படுக்கையில் கிடந்தான். அதற்கு முன் அடிக்கடி ஸ்மரணை வந்து அழுதது போலக்கூட அன்றிரவு அவன் அழவில்லை. ஏதோ ஒரு வேதனையில் அடிக்கடி உடம்பு மட்டும் துடித்தது. மார்பிலும் தொண்டையிலும் கபம் பாறையாகக் கட்டிப் போயிருந்தது. மார்பில் கபக்கவசத்தை (ஆன்டி பிளாஜிஸ்டின்) அடை போல அப்பியிருந்தார்கள். பிளானல் சட்டை போடப் பட்டிருந்தது தேகம் முழுவதும் நீலகிரித்தைல வேகம்.

இரவெல்லாம் பாலுதான் படுக்கையண்டை கண்ணயராமல் உட்கார்ந்து கொண்டு கவனித்து வந்தான். ஜானகி பதினைந்து நாட்களாய் இராப்பகலாகக் கஞ்சியும் வெந்நீரும் மாறி மாறித் தயார் செய்வதிலும் சமையல் வேலைகளைக் கவனிப்பதிலும் ஈடுபட்டிருந்ததால் அயர்ந்து போய்விட்டாள். வருத்தத்தின் மிகுதியால் களைப்புற்றுத் தன்னை மறந்து அதிகாலையில் கொஞ்சம் தூக்கிவிட்டாள். பாலுவின் தாய் கூடத்தில் தொங்கவிட்டிருந்த படங்களின் கீழ்ப் படுத்துக் கொண்டு, வேண்டுதலை செய்து உரக்கத், தெய்வங்களை அழைத்துக் கொண்டிருந்தாள்.

விளக்கு வைத்தபோது ஆரம்பித்த மழை இரவு முழுவதும் விடவில்லை. இடியும் மின்னலும் காற்றுமாகப் பூமியை ரணகளமாக்கின. அன்றிரவு ஊரில் அநேக மரங்கள் சாய்ந்தன. ஒரு தென்னை மரம் இடி விழுந்து எரிந்து போயிற்று. அறையின் கதவுகளை இறுகச் சாத்தி விட்டுப் படுக்கையண்டை உட்கார்ந்து கொண்டு பாலு கடிகாரத்தைப் பார்த்த வண்ணமாக இருந்தான். அதிகாலையில்தான் மழை நின்றது.

*1943*

ராக்ஷஸனைப்போல இரவு முழுவதும் அட்டகாசம் செய்த புயல் விடியற்காலையில் எங்கோ மறைந்து போய்விட்டது.

இரவில் வந்து குழந்தையைச் சோதித்துப் பார்த்த டாக்டர் நாடி ஒன்றும் பிடிபடவில்லை யென்றும் காலையில் தான் நிதானப்படும் என்றும் சொல்லி விட்டார். உடம்பிற்கு உஷ்ணம் கொடுப்பதற்காக இடைவிடாமல் கால்களில் தவிடு 'ஒற்றடம்' போடச் சொன்னார்.

கடைசியாக அடுத்த வீட்டு வாசலில் சாணி தெளிக்கும் சத்தம் பாலுவின் காதில் பட்டது. சாதாரணமான காலங்களில் அப்பேர்ப்பட்ட சில்லறைச் சம்பவங்கள் நமது கவனத்திற்கே வருவதில்லை. மிகவும் அற்பமான சில தினசரி நிகழ்ச்சிகள் சில நெருக்கடிக் காலங்களில் மிகவும் முக்கியமாகிவிடுகின்றன. நாம் எதிர்பாராத வகையில் விரோத மாகவோ உதவியாகவோ இருக்கின்றன. அந்தச் சாணி தெளிக்கிற சத்தம், அன்று அவன் காதில் உயிரைக் கொடுக்கும் நாதமாகக் கேட்டது. பிரக்ஞையற்றுப் படுக்கையில் கிடந்த உடம்பே உயிர்ச் சின்னத்துடன் புரண்டு கொடுத்த சத்தம்போல் இருந்தது அது. அவனுக்கே உயிர் வந்தது. 'அப்பாடா!' என்று ஆறுதலுடன் மூச்சுவிட்டான். அப்போது தான் அவனுக்குச் சிரமமும் தளர்ச்சியும் ஏற்பட்டது தெரிந்தது.

குழந்தையின் அருகில் ஜானகியை இருக்கச் சொல்லிவிட்டு, மெதுவாக வாசற் கதவைத் திறந்து கொண்டு வெளித் திண்ணையில் போய் உட்கார்ந்தான். வெகு சீக்கிரத்தில் பலபலவென்று பொழுது விடிந்து சூரியோதயமுமாயிற்று. நீண்ட இரவிற்குப் பிறகு பகல் பரவுகின்ற சுருக்குத்தான் என்ன? டாக்டரின் வருகையை ஒவ்வொரு நிமிஷமும் எதிர்பார்த்து இருப்புக் கொள்ளாதவனாய் அங்கும் இங்கும் உலாவ ஆரம்பித்தான். அப்போது தோட்டி தெருவை வெகு அவசர மாகக் கூட்டிக்கொண்டு போனான்.

'என்ன எளவு, மானமே உதிந்து போனாப்போலே! இன்னக்கிங்கத் தெருவுலே என்ன குப்பை? கூரையெல்லாம் பிச்சிக்கிட்டு வந்து கெடக்கு' என்று தனக்குத்தானே பேசிக்கொண்டு போனான் அவன்.

மனக்கவலையைக் கொஞ்சநேரம் மறக்க யாரிடமாவது, வேறு ஏதாவது பேசினால் தேவலைபோல் இருந்தது பாலுவுக்கு. அந்த மாற்று இல்லாவிட்டால் அவனால் தாங்கமுடியாதுபோல் இருந்தது.

'இன்னிக்கிங்க என்கிறாயே, என்னப்பா இன்னிக்கி விசேஷம்? என்று கேட்டான்.

'ஆமாங்க, சோதனெங்க; எம் மவளுக்கு பத்து நாளாக் காச்சலுங்க; சட்டுனு கூட்டிப்பிட்டுப் போயி, மருந்து வாங்கியாரணும். ராவெல்லாம் குளிர்லே வெறச்சிப் போனாங்க-?'

'ஏம்ப்பா?'

'ஊடெல்லாம் ஒளுக்குங்க. ஒரு மூலேலே அவளெக்கெடத்தி,

துண்டைக் கட்டிக்கிட்டு என் வேட்டியை எடுத்துப் போத்தி வச்சேனுங்க. ஏங்கிரிங்க!'

'என்ன காய்ச்சல்?'

'அதென்னமோ இருபது நாளைக் காச்சலுங்களாம். டாக்டரு ஊசி போடணுங்கறாரு. மார்லெ சளியிருக்குதாம். மருந்து வாங்கணுமாம். தேதி அஞ்சாச்சுங்க. இன்னும் சம்பளம் வரிலிங்க; மேஸ்த்திரி வாங்கிப் புட்டு, சாக்குப் போக்குச் சொல்றாருங்க.'

'மேஸ்திரியிடம் எப்படிப் போயிற்று, உன் சம்பளம்?'

'நான் தக்குறிங்க. சம்ளப்பட்டிலே பேனாத்தொட்டுக் குடுக்கிறதுங்க. பணம் அவருதான் வாங்கியாரது'.

'உன் மகளுக்கு உடம்பு சரியில்லை என்று அவனுக்குத் தெரியாதா?'

'தெரியுங்க. ஊட்லே வேறே வூட்டுக்காரிக்கு பேறுகாலங்க. அதுவும் அவருக்குத் தெரியும். கொலைகாரனுங்க, இன்னிக்கி மவளே பெரியாசுபத்திரிக்கி எடுத்துக்கிட்டுப் போவணும். காலையிலே வேறே யாரையாச்சியும் வேலை செய்யச் சொல்லணும்னு கெஞ்சினேனுங்க. 'முடியாது, வேலெசெஞ்சிட்டுப் போ!' என்னானுங்க. அதானுங்க இவ்வளவு அவசரம். நம்ப காலங்க. யாரெச்சொல்றது? இல்லாட்டிச் சாக்கடெலே பெரண்ட வளுக்குக் காச்ச வருவானேனுங்க?' என்று சொல்லிக் கொண்டே மேலே கூட்டிச் சென்றான்.

பாலு அப்படியே ஸ்தம்பித்துப்போய்விட்டான். வாழ்க்கையின் கொடுமையைக் கண்டு பிரமித்தான். அன்றுதான் அதைக் கண்டான். உணர்ந்தான் என்று அர்த்தமல்ல. அன்றுதான் அவன் மனத்தில் அது காரமாகப்பட்டது. அவனுடைய குழந்தைக்கும் 'நிமோனியா' தான்! சொட்டு ஜலமோ, துளிக்காற்றோ உள்ளே போகாத அறையில், கீழே கம்பிளிகள், மேலே போர்வைகள், நீலகிரித் தைலம், ஆண்டி பிளாஸ்டின், மணிக்கு மணி மருந்து! பாலுவும், ஜானகியும், பாலுவின் தாயும் மாறி மாறிக் கண் கொட்டாமல் கவனித்தார்கள். தோட்டியின் மகள், ஓட்டைக் குச்சிலில், ஈரத்துணியில் தகப்பனுடைய இடுப்பு வேஷ்டியின் மேல் கிடந்தாள். வாழ்க்கையின் இந்த மிதமற்ற தாரதம்மியம் ஏன்?

காலை நேரத்து சுறுசுறுப்பு தெருவில் ஓட்டமும் நடையுமாக இருந்தது. அரிசிக்காரி, அங்காடிக் கூடைக்காரி இவர்கள் பல ரகமான குரல்களிலும் ராகங்களிலும் கத்திக்கொண்டு போனார்கள். வீட்டு வாசல்களில் கட்டி கறப்பதற்காக, பால்காரிகள் பசுமாடு கன்றுகளை ஓட்டிக்கொண்டு போனார்கள்.

பாலுவின் கண்ணிலோ காதிலோ இதெல்லாம் ஒன்றும் படவே இல்லை. மெய்மறந்தவனாக அப்படியே திண்ணையில் உட்கார்ந்து போனான். இரவு முழுவதும் விழித்துக்கொண்டிருந்ததன் காரணமாகக் கொஞ்சம் தூங்கிவிழுந்தான். ஒரு நிமிஷம் ஒரு கனவில் ஆழ்ந்தான்.

எங்கோ ஆகாய வெளியில் ஒரு பெரிய ஆஸ்பத்திரி. நோய்வாய்ப் பட்ட குழந்தைகளைப் பெற்றோர்கள் கொண்டுவந்து கொண்டே இருக்கிறார்கள். ஏழைக் குழந்தைகளையெல்லாம் வெளியே நிறுத்தி விடுகிறார்கள். செல்வர்களின் குழந்தைகள் உள்ளே எடுத்துச் செல்லப் படுகின்றன. திடீரென்று ஆஸ்பத்திரி மறைந்துவிடுகிறது. எல்லாக் குழந்தைகளும் ஒரே கதியில் தத்தளிக்கிறார்கள். ஏழைக் குழந்தைகள் எப்படியோ எழுந்து நடக்கின்றன! மற்றக் குழந்தைகள் மறைகின்றன. அதைக் கண்டு பாலு பதறுகிறான். உடனே விழித்துக்கொண்டு பார்த்த போது தன் வீட்டு வாசல் திண்ணையின் சுவரில் சாய்ந்து கொண்டிருந் தவன் தூங்கிக்கீழே விழும் தறுவாயில் இருந்தான். சட்டென்று சமாளித்துக் கொண்டான்.

எங்கிருந்தோ ஒரு சிறுவன் குரல் கேட்டது. 'Blessed are the poor; For they Shall inherit the earth'.

'ஏழைகள் பாக்கியசாலிகள்; அவர்கள் பூமியை ஆள்வார்கள்!'

பாலுவின் கண்கள் கலங்கின. தன்னை மறந்து மளமளவென்று கண்ணீர் சொரிந்தான்.

கிறிஸ்தவக் கலாசாலையில் படிக்கும் அடுத்த வீட்டுப் பையனின் குரல்! 'பைபிள்' பாடத்தைப் படித்துக் கொண்டிருந்தான்.

'ஏண்டாப்பா விசாரப்பட்றே. கொழந்தை துள்ளி யெழுந்து உட்கார்ந் துட்டாண்டா! சாதம் போடுன்னு கேக்கறான்! மகமாயித் தாயாருக்கு வேண்டிக் கிண்டேன். 'அம்மா! கொழந்தையைத் துள்ளி யெழுந்து உட்காரும்படியாச் செய்யி. துள்ளுக் கோழி வாங்கிவிட்டு அர்ச்சனை பண்றேன் தாயே!'ன்னு சொன்னேன். சமயவரத்தா வரப்பிரஸாதி; கண்கண்ட தெய்வம். உள்ளே போயிப் பாரு' என்று தாய் பக்கத்தில் பேசியதைக் கேட்டுப் பாலு தள்ளாடிக் கொண்டு உள்ளே போனான்.

குழந்தையண்டை போகவில்லை. மேஜையருகே சென்று பணப் பையை எடுத்துப் பார்த்தான். அதில் ஒரே ஒரு ரூபாய்தான் இருந்தது. அடுத்த நாள்தான் பாங்கிலிருந்து பணம் வாங்க முடியும். அந்த ரூபாயை எடுத்துக் கொண்டு வெளியே வந்தான்.

'ஏ, தோட்டி!' என்று கூப்பிட்டான். தோட்டி அதற்குள் தெருக்கோடி வரையிலும் போய்க் கூட்டிவிட்டுத் திரும்பிக்கொண்டிருந்தான்.

'இந்தா, இதை எடுத்துக் கொண்டுபோ!' என்று ரூபாயை போட்டு விட்டுத் திரும்பிப் பாராமல் உள்ளே போய்விட்டான்.

'ஏண்டா பாலு?' என்று கூப்பிட்டுக்கொண்டே அவன் தாய் சற்று நேரம் கழித்து உள்ளே வந்தாள்.

'ஏண்டா, பையிலே இருந்த ரூபா எங்கேடா? என்ன பண்ணினே? இப்போ மகமாயிக்கு அர்ச்சனைக்கு அனுப்பணுமே?'

'நான் அனுப்பி விட்டேன்!'

'பூசாரியெ செத்தக் கழிச்சுன்னா வரச்சொல்லியிருக்கேன்! நீ யாரண்டெ கொடுத்தே?'

'நம்பிக்கையான இடந்தானம்மா. நிச்சயம் சேர்ந்துவிடும், போ!'

'பிரசாதம் கொண்டுவரச் சொன்னயோ?'

'ஏழை சாப்பிட்டாலும் பிரசாதந் தானே?'

●